[29th August 1961

THE HON. SRI M. A. MANICKAVELU : நிரபராதியாக இருந்தால் அந்தமாதிரி கேஸ் வருவதில்லை.

SRI M. SUBBIAH CHETTIAR : அரசாங்கத்தினுடைய கவனத்திற்கு ஒன்று கொண்டுவர விரும்புகிறேன். நீங்கள் கொடுத்த ஸ்டேட்மென்ட்டின்படி 1957-ல் எண்ணெய்க்கு 20 பேரும் நெய்யுக்கு 10 பேரும் தண்டிக்கப்பட்டிருக்கிறார்கள் என்று தெரிவித்துவிட்டீர்கள். எண்ணெயில் 5 சதவிகிதம் இருந்ததற்கு ஜெயிலுக்குப் பலபேர் போயிருக்கிறார்கள். இதுமாதிரி நடவடிக்கை எடுக்காமலிருக்க அதைத் திருத்தியமைத்து நடவடிக்கை எடுக்கப்படுமா என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : சிறிய அளவில் கலப்படம் ஏற்பட்டதற்கு சிறை தண்டனை இருக்குமென்று நான் நினைக்கவில்லை. இருபத்தி நான்கு, இருபத்தைந்து என்றால் கலப்படந்தான். எது என்று பிரித்துச் சொன்னால், நான் ஏதாவது செய்யமுடியும்.

*City hospitals*

* 293 *Q.*—VIDWAN T. MUTHUKANNAPPAN : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether there is any proposal to shift any of the City hospitals from their present locations; and

(*b*) if so, the names of the hospitals and the reasons therefor?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) The Employees State Insurance Hospital, Madras, which is situated in a private rented building is proposed to be shifted to the new buildings under construction at Kilpauk.

VIDWAN T. MUTHUKANNAPPAN : சந்தடியும் நெருக்கடியும் அதிகமாகவுள்ள சென்ட்ரல், ராயப்பேட்டை போன்ற இடங்களில் இருக்கிற வைத்தியசாலைகளைச் சென்னையிலுள்ள ஒதுக்குப் புறங்களில் அமைதியான சூழ்நிலையில் மாற்றுவது குறித்து அரசாங்கம் யோசிக்குமா?

THE HON. SRI M. A. MANICKAVELU : அதுமாதிரி பெரிய ஆஸ்பத்திரிகளை மாற்ற வேண்டுமானால் ஏராளமான பணம் செலவாகும். இருக்கும் பணத்தைக்கொண்டு அதிக வசதிகளைச் செய்துகொடுக்கவேண்டும் என்பதுதான் முக்கியமான பிரச்னை. புதிதாகக் கட்டப்படும் கட்டிடங்களை தூரமான இடங்களில் கட்டுவோம். இப்போது 25, 30 லட்சம் ரூபாயில் ஒரு பெரிய கட்டிடம் கட்டப்பட்டிருக்கிறது.

MR. CHAIRMAN : Questions are over.